ஆலோசித்து, ஆராய்ந்து, சிந்தித்துச் செய்ய வேண்டும். இதனையே திருவள்ளுவர் 'எண்ணித் துணிக கருமம்' என்றார்.

10.7. **இளமையிற் கல்வி சிலைமேல் எழுத்து.**

இளமைப் பருவத்திலேயே படிக்க வேண்டிய அனைத்தையும் படித்துத் தெரிந்து கொள்ளவேண்டும். 'இளமையிற் கல்' என அவ்வையார் வலியுறுத்தியுள்ளதையும் நினைவில் கொள்க.

10.8. **ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையுமா?**

10.9. **ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு.**

10.10. **ஒரு காசுப் பேணின் இரு காசு தேறும்.**

## 11. திருக்குறள்

கடவுள் வாழ்த்து - முதல் அதிகாரம்.

## 12. செயல்திட்டம் - 1

**நாயன்மார் ஒருவர் வரலாற்றை, யாவரும் தங்கள் கைப்பட எழுதி, நகலெடுத்து பள்ளிகளில் சேர்க்கவும்.**

## 13. சொல்லும் பொருளும்

**பொல்லாப்பிள்ளையார் - உளியினால் செதுக்கப்படாத பிள்ளையார். கழல் = திருவடி = தாள் = பாதம். கோகழி - திருப்பெருந்துறை. ஏகன் - ஒருவன். அநேகன் - பல்வேறு உருவங்களாய். பிஞ்ஞுசகன் - பிஞ்ஞிலும் உறைவபவன், சிவன். சேயோன் - தூரத்தில் இருப்பவன். நிமலன் - குற்றமற்றவன். பூழியர் கோன் - பாண்டியநாட்டு மன்னன். புகலி, பிரமாபுரம், வேணுபுரம், தோணிபுரம், கழுமலம், காழி - சீர்காழி. ஆழி - கடல். ஊழி - நீண்டகாலம். புந்தி - புத்தி, மனது. பிடி - பெண்யானை. கரி - ஆண்யானை. விடை - காளை, நந்தி, இடபம். பீடு - பெருமை. பெம்மான் - பெருமான், சிவன். பெண்ணை - தென்பெண்ணை ஆறு. வெண்ணைய்நல்லூர் - திருவெண்ணைய்நல்லூர். குரவர் - குரு. ஆலவாய் - மதுரை. வைகல் - விடியல். ஆதிரை - திருவாதிரை நட்சத்திரம். ஆறங்கம் - ஆறு வேதாங்கம்.**

*மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகமெல்லாம்*
*அரன் நாமமே சூழ்க, வையகமும் துயர் தீர்கவே*
திருச்சிற்றம்பலம்.





உ
சிவமயம்

# கோடை விடுமுறை சிறுவர் தமிழ் சைவ பாடம்

**பொருளடக்கம்**



# *கோடை விடுமுறை சிறுவர் தமிழ் சைவ பாடம்*

## 1. சைவ முழக்கம் (தினமும்)

**அரகர நமப் பார்வதி பதயே நமக அரகர மகா தேவா நமக தென்னாடுடைய சிவனே போற்றி எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி ஏகம்பத்துறை எந்தாய் போற்றி பாகம் பெண்ணுருவானாய் போற்றி அண்ணாமலை எம்அண்ணா போற்றி. கண்ணாரமுதக் கடலே போற்றி காவாய் கனகத் திரளே போற்றி. கயிலை மலையானே போற்றி.**

## 2. நால்வர் துதி

பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல் போற்றி!
ஆழிமிசைக் கல்மிதப்பில் அணைந்த பிரான் அடிபோற்றி!
வாழிதிரு நாவலூர் வன்தொண்டர் பதம் போற்றி!
ஊழிமலி திருவாத வூரர் திருத்தாள் போற்றி

## 3. சிவபுராணம் சிறுவர்களுக்கு (கடவுள் வாழ்த்து - தினமும்)

திருச்சிற்றம்பலம். மாணிக்க வாசகர் அருளியது.

நமசிவாய வாஅழ்க நாதன் தாள் வாழ்க
இமைப்பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க
கோகழி ஆண்ட குருமணிதன் தாள் வாழ்க
ஆகமம் ஆகிநின்று அண்ணிப்பான் தாள் வாழ்க
ஏகன் அநேகன் இறைவன் அடிவாழ்க

வேகம் கெடுத்தாண்ட வேந்தன் அடிவெல்க
பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்தன் பெய்கழல்கள் வெல்க
புறந்தார்க்குச் சேயோன் தன் பூங்கழல்கள் வெல்க
கரங்குவிவார் உள்மகிழும் கோன்கழல்கள் வெல்க
சிரம்குவிவார் ஓங்குவிக்கும் சீரோன் கழல் வெல்க
ஈசன் அடிபோற்றி எந்தை அடிபோற்றி
தேசன் அடிபோற்றி சிவன் சேவடி போற்றி
நேயத்தே நின்ற நிமலன் அடி போற்றி
மாயப் பிறப்பு அறுக்கும் மன்னன் அடி போற்றி
சீரார் பெருந்துறை நம் தேவன் அடி போற்றி

ஆராத இன்பம் அருளும் மலை போற்றி
திருச்சிற்றம்பலம்.

## 4. விநாயகர் பாடல்கள்

### 4.1. ஐந்து கரத்தனை

ஐந்து கரத்தனை யானை முகத்தனை
இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை





காலை சிவனின் இன்னொரு கண்ணின் மேல் வைத்துக்கொண்டு தன் இரண்டாவது கண்ணை அம்பினால் குத்தி வைக்க முற்பட்டார்.

6. அப்போது சிவபெருமான் திருவாய் மலர்ந்து நில்லு கண்ணப்ப என்று மூன்று முறை கூறி, அவருடைய கரம் கண்ணப்பரின் கையைப் பிடித்துக் கொண்டது. சிவபெருமான் கண்ணப்பருக்கு அருள் புரிந்தார்.

## 10. பழமொழிகள்

**10.1. கழு தைக்க தெரியுமாம் கற்பூர வாசனை.**

கழு என்ற ஒரு வகையான கோரைப் புல்லை பாயாக தைத்து அதில் படுக்கும் போது கற்பூர வாசனை தெரியும் அதற்கு பூச்சிகள் கிட்டே வராது.

**10.2. அவனன்றி ஓர் அணுவும் அசையாது.**

**10.3. அகத்தின் அழகு முகத்தில் தெரியும்.**

அகம் என்பது மனம் அல்லது உள்ளம். மனத்தில் எழுகின்ற எண்ணங்களின் பிரதிபலிப்பு முகத்தில் தெரியும். ஒருவருடைய மன உணர்வை அல்லது மன நிலையை அவர் வாய்விட்டுச் சொல்லாவிட்டாலும் அவரது முகம் காட்டிவிடும். உள்ளத்தை எடுத்துக்காட்டும் கண்ணாடி முகமாகும்.

**10.4. அடாது செய்பவன் படாது படுவான்.**

திருடுவது, பொய் சொல்வது, ஏமாற்றுவது, கொலைசெய்வது போன்ற தகாத செயல்களைச் செய்வோர் அவற்றுக்குரிய தண்டனைகளை நிச்சயம் பெற்றே தீருவர். ஆதலால் பிறருக்குத் துன்பம், தொல்லை விளைவிப்பது நமக்கு நாமே துன்பம் விளைவித்துக் கொள்வது போலாகும்.

**10.5. ஆத்திரக்காரனுக்குப் புத்தி மட்டு.**

'ஆத்திரம்' என்பது படபடப்பு, பரபரப்பு அல்லது சினம். ஆத்திரக்காரன் என்பவன் பரபரப்புடையவன் அல்லது கோபமுடையவன். பரபரப்போ கோபமோ அடையும்போது ஒருவன் தன் நிதானத்தை, தன் நிலையை இழந்துவிடுவான். அவ்வேளையில் எதையும் தீர அல்லது நன்கு யோசிக்கும் நிலையில் அவன் இருக்கமாட்டான். அதனால் அவ்வேளையில் அவன் செய்யும் காரியங்கள் அனைத்தும் தவறாகவே போகும்; அவை அவனுக்குத் துன்பம் தரும். ஆத்திரமும் பரபரப்பும் அறிவுக்குச் சத்துருவாகும். அவ்வையார் 'ஆத்திரப்படேல்' என்று கூறியிருக்கிறார். எனவே, நாம் ஆத்திரத்தை அடக்கப் பழகிக் கொள்ளவேண்டும்.

**10.6. ஆழம் அறியாமல் காலை விடாதே.**

நீரின் ஆழத்தை அறியாமல் அதில் திடீரென்று காலைவிட்டால், நீரினுள் மூழ்க நேரிடும். ஆழமறிந்து அதில் இறங்க வேண்டும். அதைப்போன்று எந்தச் செயலிலும் ஆராய்ந்து பார்த்து இறங்க வேண்டும். அவ்வாறு செய்தால் பின்னால் வருந்த வேண்டியிராது; துன்பம் நேரிடாது. எனவே, எந்தக் காரியமானாலும் நன்கு

தரித்த கொன்றை மாலையை அவருக்கு சூட்டியருளினார்.

8. கண்ணப்ப நாயனார்
   1. பொதப்பி நாட்டில் உடுப்பூரில் வேடர்களின் தலைவன் நாகன்-தத்தை ஆகியவர்களுக்கு மகனாக திண்ணனார் பிறந்தார். சிவபெருமான் மேல் மிகுந்த அன்பு கொண்டார்.
   2. ஓர்நாள் பன்றியை விரட்டி செல்லும் போது காளத்தி மலையை அடைந்து சிவனைக் கண்டு தழுவிக் கொண்டார். சிவனுக்கு அமுது படைக்க காட்டிற்கு சென்றார்.
   3. ஆற்று நீரை வாயில் கொண்டு வந்து சிவனின் மேல் உமிழ்ந்தார். ஏற்கனவே இருந்த பூவை கால்செருப்பால் மாற்றி, தான் தலையில் சொருகிவைத்து கொண்டுவந்த பூவை சாற்றினார். சுவையான மாமிக கறியை சுவைத்துப் பார்த்து ஈசனுக்கு ஈந்தார். சுவாமி காட்டில் தனியாக இருக்கிறார் என்பதனால், இரவு முழுவதும் கண் விழித்து வில்அம்பு கொண்டு காவல் இருந்தார். காலையில் மீண்டும் காட்டிற்கு சென்றார்.
   4. தினமும் பூசை செய்யும் சிவாச்சாரியார் சிவகோசரியார், எலும்பு மாமிசங்களை கண்டு அஞ்சி சிவனிடம் அதை விலக்குமாறு விண்ணப்பம் வைத்தார். திண்ணனாரின் சிவஅன்பை உணர்த்த மறுநாள் மறைந்திருந்து பார்க்குமாறு சிவாச்சாரியார் கனவில் உரைத்தான் சிவபெருமான்.
   5. மறுநாள் காலை திண்ணனாரின் அன்பை உணர்த்த, தன் வலக்கண்ணிலிருந்து இரத்தம் சொறியுமாறு செய்தார். இதைக் கண்ட திண்ணனார் அதிர்ச்சியுற்று, இவ்வாறு செய்தவரை கொல்ல தேடினார். யாரும் கிடைக்கவில்லையாதலால், பச்சிலை வைத்தியும் செய்தார். இரத்தம் நிற்கவில்லை. ஊனுக்கு ஊன் என்ற பழமொழி ஞாபகம் வர, தன் கண்ணை அம்பினால் தோண்டி சுவாமிக்கு வைக்க இரத்தம் நின்றது. சுவாமி இப்போது, தன் இடது கண்ணில் இரத்தம் சொறியப் பண்ணினார். இதைக் கண்ட திண்ணனார் தன் செருப்பு



அருள்மிகு சாந்தநாயகி உடனுறை ஆதிபுரீசுவரர் திருக்கோவில் பள்ளிக்கருணை
நந்தி மகன்தனை ஞானக் கொழுந்தினைப்
புந்தியில் வைத்தடி போற்றுகின் றேனே.

**4.2. பிடியதன் உருவுமை**

பிடியதன் உருவுமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடும் அவரிடர்
கடிகண பதிவர அருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறை யிறையே.

**4.3. வாக்குண்டாம்**

வாக்குண்டாம் நல்ல மனமுண்டாம் மாமலராள்
நோக்குண்டாம் மேனி நுடங்காது - பூக்கொண்டு
துப்பார் திருமேனித் தும்பிக்கை யான்பாதம்
தப்பாமற் சார்வார் தமக்கு

**4.4. பாலும் தெளிதேனும்**

பாலும் தெளிதேனும் பாகும் பருப்பும் இவை
நாலும் கலந்துனக்கு நான் தருவேன்- கோலஞ்செய்
துங்கக் கரிமுகத்துத் தூமணியே! நீயெனக்கு
சங்கத் தமிழ் மூன்றுந் தா

**4.5. கணபதி என்றிட**

கணபதி என்றிடக் கலங்கும் வல்வினை
கணபதி என்றிடக் காலனும் கைதொழும்
கணபதி என்றிடக் கருமம் ஆதலால்
கணபதி என்றிடக் கருமம் இல்லையே.

**4.6. திருவாக்கும்**

திருவாக்கும் செய்கருமம் கைகூட்டும் செஞ்சொல்
பெருவாக்கும் பீடும் பெருக்கும்- உருவாக்கும்
ஆதலால் வானோரும் ஆனை முகத்தானைக்
காதலால் கூப்புவர்தம் கை.

**4.7. ஓம் என்னும் பிரணவ**

ஓம் என்னும் பிரணவ ரூப நாயகா

உமையவளின் பாலனே விநாயகா
தேவர் மூவர் போற்றும் வேத நாயகா
தேவாதி தேவனே விநாயகா
மோனத்தின் முழுப் பொருளே நாயகா
முக்கண்ணன் மைந்தனே விநாயகா
வல்வினைகள் நீக்கும் பக்தி நாயகா
வேண்டும் வரம் தந்திடும் விநாயகா

5. **பன்னிரு திருமுறை செய்திகள்** (அடிப்படை)

5.1. பன்னிரு திருமுறை கிடைத்த வரலாறு - குறிப்பு

5.1.1. திருநாரையூரில் நம்பியாண்டார் நம்பிகள் சிறுவனாக இருக்கும் போது தன் தந்தையார் வெளியூர் செல்ல தானே பூசை செய்ய நேர்ந்தது. தான் படைத்த திருவமுதை பொல்லாப்பிள்ளையார் உண்ணாமலிருக்க கண்டு அழ, பிள்ளையார் திருவமுதை உண்டார். வெளியூரிலிருந்து வந்த தந்தையாரும் இதை அறிய, நம்பியாண்டார் நம்பிகள் திருவருள் பெற்றதை ஊரே அறிந்திருந்தது.

5.1.2. பல்வேறு சிவன் கோவில்களில் சிவனடியார்கள் பல்வேறு பாடல்களை பாடுவதைக் கண்டு அதை முறைப்படுத்தி தொகுக்க விரும்பினார் மாமன்னர் இராஜராஜ சோழர். அருள்பெற்ற நம்பியாண்டார் நம்பியிடம் அப்பணியை செய்தருளுமாறு கூறினார். திருமுறைப் பாடல்கள் பற்றிய குறிப்புகள் கிடைக்க அது இருக்குமிடத்தை காட்டுமாறு பொல்லாப்பிள்ளையாரை நம்பியாண்டார் நம்பி வேண்டினார். பிள்ளையாரும் அது சிதம்பரம் கோவிலில் இருப்பதாக உரைத்தார். சமயகுரவர் நால்வரும் வந்தால்தான் ஏடுகள் இருக்கும் அறையை திறப்பதாக சிவாச்சாரியார்கள் கூறினர். மாமன்னர் இராஜராஜ சோழன் நால்வர் திருவுருவங்களையும் எழுந்தருளி செய்து ஏடுகள் இருந்த அறையை திறந்தார்.





2. தான் பிடிக்கும் மீன்களில் முதல் மீனை சிவபெருமானுக்காக நினைத்து மீண்டும் கடலிலேயே விட்டு விடுவார் தினமும். ஒரு காலத்தில் வறுமை வந்தது. சில நாட்கள் மீன்கள் கிடைக்காமல் திரும்பினார். ஓர் நாள், முதன் முதலாக நவரத்தினங்களுடன் பொருந்திய தங்க மீன் கிடைத்தது. பெரும் விலை போகும் அந்த மீனை கடலில் விடாமல் வேறு மீனை விடும் படி உறவினர்களும் நண்பர்களும் கேட்டுக்கொண்டனர். ஆனால், அதிபத்தரோ, தன் ஆழ்ந்த சிவபக்தியால், அந்த தங்க மீனை மீண்டும் சிவனுக்காக கடலில் விட்டார். அப்போது சிவபெருமான் இடப வாகனத்தில் தோன்றி அருள்புரிந்தார்.

7. சண்டிகேசுவர நாயனார்

1. திருச்சேய்ஞலூரில் பிராமண குலத்தில் எச்சதத்தன் என்பவருக்கு மகனாக விசாரசருமர் தோன்றினார். வேதங்களையும் ஆகமங்களையும் முறைப்படி கற்றார்.
2. ஓர் நாள் நண்பர்களோடு விளையாடும் போது, ஒருவன் தன் பசுமாட்டை அடிக்க, அதை தடுத்து அவனுக்கு பசுவின் பெருமையை உணர்த்தினார். பின்னர், பசு மேய்க்கும் வேலையை தினமும் செய்து வந்தார். மண்ணி ஆற்றங்கரையில் தினமும் மணலில் சிவலிங்கம் செய்து பசுவின் பாலை சொறிந்து மந்திரங்கள் கூறி தினமும் பூசை செய்தார். பால் வீணாவதை ஒருவர் ஊரில் சொல்ல, எச்சதத்தனை ஊரார் கண்டித்தனர். மறுநாள் எச்சதத்தன் மறைந்திருந்து விசாரசருமரின் செயல்களை கவனித்தார். விசாரசருமர் பூசை செய்யும் போது தோன்றி, பால் குடத்தை உதைத்து கண்டித்தார். தன் தந்தையாக இருந்தும் சிவநிந்தனை செய்ததால் கோபமுற்ற விசாரசருமர், ஒரு கோலை எடுத்து தன் தந்தையில் காலில் எறிய, அது மழுவாகி அவர் காலை வெட்டியது. தன் பூசையை தொடர்ந்து செய்ய, சிவபெருமான் உமாதேவியரோடு இடபாரூடராய் தோன்றியருளினார். அவருக்கு சண்டேசுவர பதவி தந்தோம் என்று தம் திருவாய்மலர்ந்து தன் சடையில்

கொடுக்கும் படி வேண்டி, அதை சலவை செய்ய விழைந்தார்.

2. சிவனின் அருளால் மிகுந்த மழை பெய்தது. ஆடையை உலரவைக்க முடியால் வருந்தினார். இரவில் நடுங்கிக்கொண்டு வந்த சிவபக்தர் தன் ஆடையைக் கேட்க, அதை கொடுக்கமுடியாமல் தவித்தார். வேறொரு ஆடையை ஏற்று உடுத்துபவரும் அல்லர் அவர். ஆகையால், தான் வாக்குதவறியமையால், வருந்தி தன் உயிரை மாய்க்க கல்லின் மீது தன் தலையை மோதினார். சிவபெருமான் அவரின் தலையை பிடித்துக் கொண்டு உமாதேவியரோடு இடபாரூடராய் காட்சி தந்து அருளினார்.

5. மெய்ப்பொருள் நாயனார் - சிவ வேடத்தையே மெய்ப்பொருளாக எண்ணியவர்

1. திருக்கோவிலூரில் வாழ்ந்து வந்த அரசர். மாபெரும் சிவனடியார். சிவ பூசைகள் செய்தும், சிவன் கோவில்களுக்கு திருப்பணி செய்தும் வந்தார். மாபெரும் வீரர். சிவ வேடம் தரித்தவர்களை மெய் என்று எண்ணி தொண்டு செய்பவர்.
2. இவருடன் பல முறை போரிட்டு தோல்வியுற்ற எதிரி நாட்டு அரசன் முத்தநாதன் என்பவன், சூழ்ச்சியால் வீழ்த்த, சிவவேடம் தரித்து, கத்தியை மறைத்து மெய்ப்பொருள் நாயனார் அரண்மனைக்குள் வந்தார். யாருமில்லாத சமயம் மெய்ப்பொருள் நாயனாரை குத்தினான். மெய்க்காப்பாளன் தத்தன் முத்தநாதனை கொல்ல பாயும் நேரத்தில் மெய்ப்பொருள் நாயனார் முத்தநாதனின் சிவ வேடம் கண்டு, தத்தனை தடுத்து, பாதுகாப்பாக தன் நாட்டின் எல்லையில் சென்று விடுமாறு ஆணையிட்டார். முத்தநாதனை பத்திரமாக எல்லையில் விட்டுவிட்ட செய்தி கேட்ட பின்னரே உயிர் நீத்து சிவபதம் அடைந்தார்.

6. அதிபத்த நாயனார் - தினமும் முதல் மீனை சிவனுக்கு அர்ப்பணித்தவர்

1. நாகப்பட்டிணத்தில் வாழ்ந்து வந்த மீனவர் அதிபத்தர். சிறந்த சிவபக்தர்.





5.1.3. ஏடுகளின் பெரும் பகுதி கரையான்களால் அரித்து சிதைந்து காணாமல் போயிருந்தது. உங்களுக்கு தேவையானவற்றை மட்டும் நான் கொடுத்துள்ளேன் என்று அசரீரி ஒலிக்க, ஏடுகளை ஏடுத்து தொகுத்தார் நம்பியாண்டார் நம்பி சுவாமிகள். அவர் தொகுத்தது மொத்தம் 11 திருமுறைகள். 12 ஆம் திருமுறையாகிய திருத்தொண்டர் புராணம் சேக்கிழார் சுவாமிகள் 12 ஆம் நூற்றாண்டில் அருளிச் செய்தார்.

5.2. திருத்தொண்டர் புராணம் சிறப்பு

5.3. சமய குரவர்களும் சந்தான குரவர்களும்

5.4. பன்னிரு திருமுறை நூல்களும் பதிகங்களும்

| சமய குரவர் | அருளியது | சந்தான குரவர் | அருளியது |
|---|---|---|---|
| திருஞானசம்பந்தர் | தோத்திரம் | மெய்கண்டதேவர் | சாத்திரம் |
| திருநாவுக்கரசர் | | அருணந்தி சிவாச்சாரியார் | |
| சுந்தரமூர்த்தி | | மறைஞான சம்பந்தர் | |
| மாணிக்கவாசகர் | | உமாபதி சிவாச்சாரியார் | |

| திருமுறை | ஆசிரியர் | நூல் பெயர் | பாடல்கள் | |
|---|---|---|---|---|
| 1,2,3 | திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் | திருக்கடைக் காப்பு | 1469, 1331, 1358 | 4158 |
| 4,5,6 | திருநாவுக்கரசர் | தேவாரம் | 1070, 1015, 981 | 3066 |
| 7 | சுந்தரமூர்த்தி சுவாமிகள் | திருப்பாட்டு | 1026 | |
| 8 | மாணிக்கவாசகர் | திருக்கோவையார், திருவாசகம் | 400, 656 | 1058 |
| 9 | திருமாளிகைத்தேவர், சேந்தனார், கருவூர்த்தேவர், பூந்துருத்தி நம்பிகாட நம்பி, கண்டராதித்தர், வேணாட்டடிகள், திருவாலியமுதனார், புருஷோத்தம நம்பி, சேதிராயர், சேந்தனார் | திருவிசைப்பா, திருப்பல்லாண்டு | 301 | |
| 10 | திருமூலர் | திருமந்திரம் | 3047 | |
| 11 | திருவாலவாய் உடையார்(ஈசன்), காரைக்கால் அம்மையார், ஐயடிகள் காடவர் கோன், சேரமான் பெருமான், நக்கீரர், கல்லாடர், கபிலர், பரணர், இளம்பெருமான் அடிகள், அதிரா அடிகள், பட்டினத்தார், நம்பியாண்டார் நம்பி | பிரபந்தம் | 1385 | |

| | | | | |
|---|---|---|---|---|
| 12 | சேக்கிழார் | பெரியபுராணம் | 4286 | |

## 6. பதிக பாடல்கள் - பன்னிரு திருமுறை பாடல்கள்

### 6.1. பன்னிரு திருமுறை ஆசிரியர் 27 வர் துதி

திருஞான சம்பந்தர் நாவரசர் சுந்தரர்
திருவாதவூரர் மற்றைத்
திருமாளிகைத் தேவர் சேந்தனார் க்ருவூரர்
தெள்ளு பூந்துருத்த் நம்பி
வருஞான கண்டராதித்தர் வேணாட்டடிகள்
வாய்ந்த திருவாலிஅமுதர்
மருவு புருடோத்தமர் சேதிராயர் மூலர்
மன்னு திரு ஆலவாயார்
ஒரு காரைக்காலம்மை ஐயடிகள் சேரமான்
ஒளிர்கீரர் கல்லாடனார்
ஒண்கபிலர் பரணர் மெய்யுணர் இளம்பெருமானோடு
ஓங்கு அதிரா அடிகளார்
திருமேவு பட்டினத்து அடிகளோடு நம்பியாண்டார் நம்பி
சேக்கிழாரும் சிவநெறித்
திருமுறைகள் பன்னிரண்டு அருள் செய்த
தெய்வீகத் தன்மையோரே!

### 6.2. அறுபத்து மூவர் துதி

தத்து மூதெயில் மூன்றும் தழலெழ
முத்து மூரல் முகிழ்த்த நிராமய
சித்து மூர்த்திதன் தாளிணை சேர்அறு
பத்து மூவர் பதமலர் போற்றுவாம்.

### 6.3. சேக்கிழார் துதி

தூக்கு சீர்திருத் தொண்டத் தொகைவிரி
வாக்கி னாற்சொல்ல வல்ல பிரான்எங்கள்
பாக்கி யப்பய னாப்பதி குன்றைவாழ்
சேக்கி ழான்அடி சென்னி இருத்துவாம்.





3. பல்வேறு மக்களும் பங்குகொண்டபங்குனி திருவிழாவிலே கலந்து கொண்டு வீடு திரும்பி குளித்துவிட்டு வீட்டிற்குள் செல்வோம் என்று படுத்திருந்த போது, சிவபெருமான் கனவில் தோன்றி, திருவாரூரில் இருப்பவர் எவரும் சிவகணங்களே என்று கூற, தம் மனதிலுள்ள வேற்றுமையை களைந்தார்.

3. இளையான் குடிமாற நாயனார் - தினமும் மாகேசுவர பூசை செய்து தொண்டு செய்தல்
    1. இளையானாகுடியில் பிறந்து வேளாண்மை தொழில் செய்த வேளாளர்.
    2. தினமும் தவறாது மாகேசுவர பூசை செய்து வந்தார்.
    3. வறுமை வந்த காலத்தும் இவர் இத் தொண்டை செய்வார் என்பதை உணர்த்த சிவபெருமான் வறுமையை அருளினார். வீட்டில் ஏதும் இல்லாத ஓர் நாள், எந்த அடியவரும் வராத நிலையில், உணவு உண்ணாமல் மாலை வரை சோர்ந்திருந்தார். சிவபெருமான் கனத்த மழை வரவழைத்தும், அடியார் வேடம் கொண்டு மாறனார் வீட்டிற்கு வர, அவரை வரவேற்று உபசரித்தார். அரிசி இல்லாமையால், இரவில் தட்டு தடுமாறி நிலத்திற்கு சென்று நெல் பறித்து வந்து கொடுத்தார். மீண்டும் தோட்டத்தில் சென்று காய் பறித்து கொடுத்தார். விறகு இன்மையால், தன் வீட்டின் கூரையையே பிய்த்து அடுப்பு எரித்து பூசித்து அருளினார். சிவபெருமான் இடப வாகனத்தில் காட்சி தந்து அருளினார்.
4. திருக்குறிப்புத் தொண்டர்
    1. காஞ்சிபுரத்தில் சிவனடியார்களின் குறிப்பை அறிந்து தொண்டு செய்தமையால் திருக்குறிப்புத்தொண்டர் எனப் பெயர் பெற்றார். இவர் தினமும் சிவனடியார் ஒருவரின் ஆடையை சலவை செய்து கொடுத்து திருத்தொண்டு செய்து வந்தார். ஓர் நாள், சிவபெருமான் சிவபக்தர் வேடங்கொண்டு இவரிடம் வர, திருக்குறிப்புத்தொண்டர் அவரிடம் ஆடையை

**4. மாணிக்கவாசக சுவாமிகள்**

- மதுரை அருகிலுள்ள திருவாதவூரில் அவதரித்தார் திருவாதவூரர்.
- அரிமர்த்தன பாண்டியனின் அவையில் அமைச்சரானார். குதிரைகள் வாங்க மன்னர் அனுப்ப, திருப்பெருந்துறையில் சிவபெருமான் குருநாதராய் தோன்றி மாணிக்க வாசகரை ஆட்கொண்டார். திருப்பெருந்துறையில் பெரிய கோவில் கட்டினார். நரிகளை குதிரைகளாக மாற்றியும், வைகையில் வெள்ளம் வரவைத்து பிட்டுக்கு மண் சுமந்து பிரம்படி பட்டும் தன் திருவிளையாடலை சிவபெருமான் நடத்தினார்.
- தலயாத்திரைகள் செய்து 8 ம் திருமுறையான திருவாசகமும் திருக்கோவையாரும் அருளினார். புத்தர்களை வாதில் வென்று ஈழ மன்னரின் ஊமை மகளை பேச வைத்தார். மாணிக்கவாசகர் சொல்ல, சிவபெருமானே அந்தணர் வேடத்தில் வந்து திருவாசகத்தையும் திருக்கோவையாரையும் தன் கைப்பட எழுதி திருவாதவூரன் சொற்படி திருச்சிற்றம்பலமுடையான் என கையெழுத்திட்டார். திருவாசகம் பல்வேறு அந்நிய மொழிகளில் மொழிமாற்றம் செய்யப்பட்டுள்ளது.

2. நமிநந்தி அடிகள் - தினமும் திருவிளக்கேற்றி தொண்டு செய்தல்
   1. திருவாரூர் அருகே, திருஏமப்பேறூரில் வாழ்ந்தார்.
   2. திருவாரூர் சென்று அரநெறி கோவிலில் தினமும் விளக்கிடும் திருத்தொண்டை செய்து வந்தார். ஓர் நாள் விளக்கிட எண்ணெய் இல்லாமல், பக்கத்திலிருக்கும் வீட்டில் சென்று எண்ணெய் கேட்க, அங்கிருந்த சமணர்கள் குளத்து நீரை எடுத்து ஊத்தும் என்று கேலி செய்ய, மனவருத்தமுடன் இருந்தார். அப்போது, குளத்து நீறை ஊற்றி விளக்கு ஏற்றுக என்று சிவபெருமானின் அசரீரி ஒலிக்க, அவ்வாறே குளத்து நீரை எடுத்து ஊற்றி விளக்கு எரிந்தது.



அருள்மிகு சாந்தநாயகி உடனுறை ஆதிபுரீசுவரர் திருக்கோவில் பள்ளிக்கருணை

**6.4. சந்தானகுரவர் துதி**

ஈராண்டிற் சிவஞானம் பெற்றுயர்ந்த
மெய்கண்டார் இணைத்தாள் போற்றி
நாராண்ட பல்லடியார்க் கருள்புரிந்த
அருணந்தி நற்றாள் போற்றி
நீராண்ட கடந்தை நகர்மறைஞான
சம்பந்தர் நிழற்றாள் போற்றி
சீராண்ட தில்லைநகர் உமாபதியார்
செம்பதுமத் திருத்தாள் போற்றி.

**6.5. முதல் திருமுறை - திருஞானசம்பந்தர் அருளியது**

தோடு உடைய செவியன் விடை ஏறி ஓர் தூ வெண் மதி சூடி
காடு உடைய சுடலை பொடி பூசி என் உள்ளம் கவர் கள்வன்
ஏடு உடைய மலரான் முனை நாள் பணிந்து ஏத்த அருள் செய்த
பீடு உடைய பிரமாபுரம் மேவிய பெம்மான் இவன் அன்றே

**6.6. இரண்டாம் திருமுறை - திருஞானசம்பந்தர் அருளியது**

மந்திர மாவது நீறு வானவர் மேலது நீறு
சுந்தர மாவது நீறு துதிக்கப் படுவது நீறு
தந்திர மாவது நீறு சமயத்தி லுள்ளது நீறு
செந்துவர் வாய்உமை பங்கன் திருஆல வாயான் திருநீறே.

**6.7. மூன்றாம் திருமுறை - திருஞானசம்பந்தர் அருளியது**

மண்ணின்நல் லவண்ணம் வாழலாம் வைகலும்
எண்ணின்நல் லகதிக்கி யாதுமோர் குறைவிலை
கண்ணில்நல் லஃதுறுங் கழுமல வளநகர்ப்
பெண்ணினல் லாளொடும் பெருந்தகை யிருந்ததே

6.8.

காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி
ஓதுவார் தமை நன்னெறிக்கு உய்ப்பது
வேதம் நான்கினும் மெய்ப்பொருளாவது
நாதன் நாமம் நமச்சிவாயவே.

**6.9. நான்காம் திருமுறை - திருநாவுக்கரசர் அருளியது**

சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சி வாயவே

6.10.

இல்லக விளக்கது இருள் கெடுப்பது
சொல்லக விளக்கது சோதி யுள்ளது
பல்லக விளக்கது பலருங் காண்பது
நல்லக விளக்கது நமச்சி வாயவே.

**6.11. ஐந்தாம் திருமுறை - திருநாவுக்கரசர் அருளியது**

அன்னம் பாலிக்குந் தில்லைச்சிற் றம்பலம்
பொன்னம் பாலிக்கு மேலுமிப் பூமிசை
என்னம் பாலிக்கு மாறுகண் டின்புற
இன்னம் பாலிக்கு மோவிப் பிறவியே

6.12.

அல்லல் என்செயும் அருவினை என்செயும்
தொல்லை வல்வினைத் தொந்தந்தான் என்செயும்
தில்லை மாநகர்ச் சிற்றம் பலவனார்க்கு
எல்லை யில்லதோர் அடிமைபூண் டேனுக்கே.

6.13.

மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கின வேணிலும்
மூசு வண்டறைப் பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தன் இணையடி நிழலே!

6.14.

நமச்சி வாயவே ஞானமுங் கல்வியும்
நமச்சி வாயவே நானறி விச்சையும்
நமச்சி வாயவே நாநவின் றேத்துமே
நமச்சி வாயவே நன்னெறி காட்டுமே.

6.15.

வேத நாயகன் வேதியர் நாயகன்
மாதின் நாயகன் மாதவர் நாயகன்
ஆதி நாயகன் ஆதிரை நாயகன்
பூத நாயகன் புண்ணிய மூர்த்தியே.

6.16.

நங்க டம்பனைப் பெற்றவள் பங்கினன்
தென்க டம்பைத் திருக்கரக் கோயிலான்
தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே.



அருள்மிகு சாந்தநாயகி உடனுறை ஆதிபுரீசுவரர் திருக்கோவில் பள்ளிக்கருணை

பாடலிபுத்திரம் சென்று தருமசேனர் என்ற பெயரை பெற்றார். இவரது தமக்கையார் (அக்கா) திலகவதிரார் இவர் சைவ சமயத்திற்கு திரும்ப வேண்டும் என்று சிவனிடம் தொடர்ந்து விண்ணப்பம் வைத்து வந்தார். அதை நிறைவேற்றும் வகையில், சிவபெருமான் திருநாவுக்கரசருக்கு தீராத வயிற்று வலி கொடுத்து ஆட்கொண்டார். சமணர்களால் வயிற்று வலியை தீர்க்கமுடியவில்லை ஆதலால், திலகவதியாரின் அறிவுரைப்படி திருவதிகை சிவபெருமானை வணங்கி கூற்றாயினவாறு என்ற பதிக பாடலை பாடி சைவ சமயத்தை தழுவினார்.

- பல்வேறு தலங்களுக்கு யாத்திரை சென்று பதிக பாடல்கள் பாடினார். 4,5,6 ஆம் திருமுறை முழுவதும் திருநாவுக்கரர் சுவாமிகள் அருளிய தேவாரமாகும்.
- உழவாரம் என்ற ஆயுதம் கொண்டு திருக்கோவில் உழவாரப் பணி செய்து கேவில்களை தூய்மைபடுத்தி வந்தார்.
- பல்வேறு அற்புதங்கள் புரிந்து, சைவ சமயம் ஓங்கி வளர முக்கிய பங்களித்தார்.

**3. சுந்தமூர்த்தி சுவாமிகள்**

- திருநாவலூரிலே நம்பியாரூரராக பிறந்தார்.
- திருமணத்தின் போது சிவபெருமான் வயோதிகராக வேடமிட்டு இவன் எனக்கு அடிமை என்று வழக்கு போட்டு தடுத்தாட்கொண்டார்.
- சிவபெருமானே பித்தா என்று ஆரம்பித்து அருள, பித்தா பிறை சூடி பெருமானே அருளாளா எனத் தொடங்கி, பல திருத்தலங்களுக்குச் சென்று பதிகம் பாடி 7 ஆம் திருமுறையை அருளினார். விறண்மின்ட நாயனார், அடியார்களின் பெருமையை உணர்த்த, சிவபெருமான் தில்லை வாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன் என்று வரி எடுத்துக் கொடுக்க, 63 நாயன்மார்களை காட்டிய திருத்தொண்டத்தொகை பாடியருளினார்.
- முதலை முழுங்கிய குழந்தையை மீட்டார். ஏயர்கோன் கலிக்காம நாயனாரை காப்பாற்றினார். பல அற்புதங்கள் புரிந்தார்.

அழகன் முருகன் வேல் அள்ளியள்ளித் தந்த வேல்
மின்னும் கதிர்வேல் சண்முகன் சதுர்வேல்
சங்கடங்கள் தீர்க்கும் வேல் சத்ருசங்கார வேல்
முத்துக்குமார வேல் முன்னின்று காக்கும் வேல்
வானோர் தொழுத வேல் ஞானம் அருளும் வேல்

8.2. ஆறிரு தடந்தோள் வாழ்க! அறுமுகம் வாழ்க! வெற்பைக்
கூறுசெய் தனிவேல் வாழ்க! குக்குடம் வாழ்க! செவ்வேல்
ஏறிய மஞ்ஞை வாழ்க! யானை தன் அணங்கும் வாழ்க!
மாறிலா வள்ளி வாழ்க! வாழ்க சீர் அடியாரெல்லாம்!

8.3. ஏறுமயில் ஏறி விளையாடும் முகம் ஒன்றே!
ஈசருடன் ஞானமொழி பேசும் முகம் ஒன்றே!
கூறும் அடியார்கள் வினை தீர்க்கும் முகம் ஒன்றே!
குன்று உருவ வேல் வாங்கி நின்ற முகம் ஒன்றே!
மாறுபடு சூரரை வதைத்த முகம் ஒன்றே!
வள்ளியை மணம் புணர வந்த முகம் ஒன்றே!
ஆறுமுகம் ஆன பொருள் நீ! அருள வேண்டும்!
ஆதி அருணாசலம் அமர்ந்த பெருமாளே!

## 9. நாயன்மார்கள் வரலாற்று குறிப்புகள்

1. நால்வர் வரலாற்று குறிப்புகள்

### 1. திருஞானசம்பந்தர் சுவாமிகள்

- சீர்காழியில் 7ம் நூற்றாண்டில் பிறந்தார். 3 ஆம் வயதில் பார்வதி அம்மையார் ஞானப்பால் அருளினார். இதனால் சிவஞானம் பெற்றார். பல்வேறு தலங்களுக்கு யாத்திரை செய்து பதிக பாடல்கள் பாடினார். பல்வேறு அற்புதங்களை நிகழ்த்தினார்
- 1,2,3 ஆம் திருமுறைகள் அருளினார். பாண்டிய மன்னனை வெப்பு நோயிலிருந்து குணப்படுத்தி, சமணர்களை வென்று சைவத்தை நிலைநாட்டினார். சைவ சமயம் தழைத்தோங்கி வளர முக்கிய பங்களித்தார்.

### 2. திருநாவுக்கரசர் சுவாமிகள்

- திருவாய்மூரிலே மருள்நீக்கியாராக பிறந்தார். சமண பள்ளியில் பயின்றதால், சமண சமயத்திற்கு மாறி



அருள்மிகு சாந்தநாயகி உடனுறை ஆதிபுரீசுவரர் திருக்கோவில் பள்ளிக்கருணை

### 6.17. ஆறாம் திருமுறை - திருநாவுக்கரசர் அருளியது

வேற்றாகி விண்ணாகி நின்றாய் போற்றி
மீளாமே ஆளென்னைக் கொண்டாய் போற்றி
ஊற்றாகி உள்ளே ஒளித்தாய் போற்றி
ஓவாத சத்தத் தொலியே போற்றி
ஆற்றாகி யங்கே அமர்ந்தாய் போற்றி
ஆறங்கம் நால்வேத மானாய் போற்றி
காற்றாகி யெங்குங் கலந்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி

### 6.18. ஏழாம் திருமுறை - சுந்தரர் அருளியது

பித்தா பிறை சூடி பெருமானே அருளாளா
எத்தான் மறவாதே நினைக்கின்றேன் மனத்துன்னை
வைத்தாய்பெண் ணைத்தென்பால் வெண்ணைய்நல்லூர் அருள்துறையுள்
அத்தா உனக்காளாய் இனி அல்லேன் எனலாமே!

**6.19.**

பொன்னார் மேனியனே புலித்தோலை அரைக்கசைத்து
மின்னார் செஞ்சடைமேல் மிளிர்கொன்றை அணிந்தவனே
மன்னே மாமணியே மழபாடியுள் மாணிக்கமே
அன்னே உன்னையல்லால் இனியாரை நினைக்கேனே

### 6.20. எட்டாம் திருமுறை - மாணிக்கவாசகர் அருளியது

நானேயோ தவம் செய்தேன்? `சிவாய நம' எனப் பெற்றேன்?
தேனாய், இன்னமுதமுமாய் தித்திக்கும் சிவபெருமான்
தானே வந்து, எனது உள்ளம் புகுந்து, அடியேற்கு அருள் செய்தான்
ஊன் ஆரும் உயிர் வாழ்க்கை ஒறுத்து அன்றே, வெறுத்திடவே!

6.21.

வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி
ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்க்
கோனாகி யான்எனதென் றவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை என்சொல்லி வாழ்த்துவனே.

### 6.22. ஒன்பதாம் திருமுறை - சேந்தனார் திருப்பல்லாண்டு

மன்னுக தில்லை வளர்கநம் பக்தர்கள் வஞ்சகர் போயகலப்
பொன்னின்செய் மண்டபத்துள்ளே புகுந்து புவனி எல்லாம் விளங்க
அன்னநடை மடவாள் உமைகோன் அடியோமுக்கு அருள்புரிந்து

பின்னைப் பிறவி அறுக்க நெறிதந்த பித்தற்குப் பல்லாண்டு
கூறுதுமே.

**6.23. ஒன்பதாம் திருமுறை - திருமாளிகைத்தேவர்**

நையாத மனத்தினை நைவிப்பான் இத்தெருவே
ஐயாநீ! உலாப்போந்த அன்றுமுதல் இன்றுவரை
கையாரத் தொழுதுஅருவி கண்ணாரச் சொரிந்தாலும்
செய்யாயோ அருள்? கோடைத் திரைலோக்கிய சுந்தரனே.

**6.24. பத்தாம் திருமுறை - திருமூலர் அருளிய திருமந்திரம்**

சிவசிவ என்கிலர் தீவினையாளர்
சிவசிவ என்றிடத் தீவினை மாளும்
சிவசிவ என்றிடத் தேவரும் ஆவர்
சிவசிவ என்னச் சிவகதி தானே

6.25.

யாவர்க்குமாம் இறைவர்க்கொரு பச்சிலை
யாவர்க்குமாம் பசுவுக்கொரு வாயுறை
யாவர்க்குமாம் உண்ணும்போதொரு கைப்பிடி
யாவர்க்குமாம் பிறர்க்கின்னுரை தானே

6.26.

தெளிவு குருவின் திருமேனி காண்டல்
தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்
தெளிவு குருவின் திருநாமம் செப்பல்
தெளிவு குருவின் திருவுரு சிந்தித்தல்தானே

**6.27. பதினோராம் திருமுறை**

பிறந்து மொழி பயின்ற பின்னெல்லாம் காதல்
சிறந்துநின் சேவடியே சேர்ந்தேன் - நிறந்திகழும்
மைஞ்ஞான்ற கண்டத்து வானோர் பெருமானே
எஞ்ஞான்று தீர்ப்ப திடர்

6.28.

இடர்களையா ரேனும் எமக்கிரங்கா ரேனும்
படரும் நெறிபணியா ரேனும் -சுடர்உருவில்
என்பறாக் கோலத் தெரியாடும் எம்மானார்க்
கன்பறா தென்னெஞ் சவர்க்கு

6.29.

பாலுக்கு பாலகன் வேண்டி அழுதிடப் பாற்கடல் ஈந்தபிரான்
மாலுக்குச் சக்கரம் அன்றருள் செய்தவன் மன்னிய தில்லைதன்னுள்





ஆவிக்கும் அந்தணர் வாழ்கின்ற சிற்றம் பலமே இடமாகப்
பாலித்து நட்டம் பயிலவல் லானுக்கே பல்லாண்டு கூறுதுமே.

**6.30. பன்னிரெண்டாம் திருமுறை - சேக்கிழார் பெரிய புராணம்**

உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன்
நிலவுலாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத்து ஆடுவான்
மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்.

6.31.

கற்பனை கடந்த சோதி கருணையே உருவ மாகி
அற்புதக் கோல நீடி அருமறைச் சிரத்தின் மேலாஞ்
சிற்பர வியோம மாகுந் திருச்சிற்றம் பலத்துள் நின்று
பொற்புடன் நடஞ்செய் கின்ற பூங்கழல் போற்றி போற்றி.

**வாழ்த்து**

வான்முகில் வழாது பெய்க மலிவளம் சுரக்க மன்னன்
கோன்முறை அரசு செய்க குறைவிலாது உயிர்கள் வாழ்க
நான்மறை அறங்கள் ஓங்க நற்றவம் வேள்வி மல்க
மேன்மை கொள் சைவ நீதி விளங்குக உலகமெல்லாம்

**7. அம்மா உமை பார்வதி பாடல்கள்**

தனம் தரும் கல்வி தரும் ஒரு நாளும் தளர்வு அறியா
மனம் தரும் தெய்வ வடிவும் தரும் நெஞ்சில் வஞ்சம் இல்லா
இனம் தரும் நல்லன எல்லாம் தரும் அன்பர் என்பவர்க்கே
கனம் தரும் பூங்குழலாள் அபிராமி கடைக்கண்களே

**8. முருக பெருமான் பாடல்கள்**

8.1. வேல் வேல் வடிவேல் வேதாந்த வடிவேல்
நாதாந்த முடிமேல் நான்மறைகள் போற்றும் வேல்

தேவியவள் தந்த வேல் தேவர் மூவர் போற்றும் வேல்
குழந்தைக் குமாரவேல் குன்று தோறுமாடும் வேல்
பாலகனின் கைவேல் பாவவினை தீர்க்கும் வேல்
கந்தன் கதிர்வேல் கவலைகளைப் போக்கும் வேல்
வேல் வேல் வெற்றிவேல் தேவர்சிறை மீட்ட வேல்
வாரி வழங்கும் வேல் வள்ளல் குணம் கொண்ட வேல்
ஆடும்பரிவேல் ஆபரணம் தரித்த வேல்